# நட்சத்திரங்களோடு சூதாடுபவர்கள்

*''ஜோசப் அவளை அவமானப்படுத்த மனதில்லாமல் ரகசிய மாகத் தள்ளிவிட யோசனையாயிருந்தான்.'' மத்தேயு: அதிகாரம் 1:19*

அவனும் அறிந்திருந்தான், தான் மணக்க இருக்கும் ஸ்திரியைப் பற்றிய சேதிகள் பல காதுகளின் வழி ரகசியமாகச் சுற்றி அலை வுறுவதை. என்றாலும் யாரிடமும் இதைப் பற்றி அவன் பேசிக் கொள்ளவோ, முணுமுணுக்கவோ, விருப்பமில்லாதவனாக இருந்தான். சில தினங்களே மணநாளுக்கு மீதமிருந்தன. தச்சுக் கூடத்தின் இழைப்புளியினின்று சுருண்டு விழும் மரச்சுருள் பெண்ணின் கேசத்தை நினைவுகொள்ளத் தூண்டிய போதிலும் அவன் இயல்பிலே உலர்ந்துபோனவனாகயிருந்தான். நாசரேத் தில் உள்ள இடையர்களில் எவனாவது மரவேலைகளுக்காக அவனிடம் வந்துபோவதைத் தவிர்த்தால் தச்சுக்கூடத்தில் அதிகம் வேலையில்லை. இடையர்களில் குள்ளமானவனாக இருந்தவனும் செம்பட்டை படிந்த தலைமயிர் கொண்டவனு மான ரவெல், காற்றின் அலைக்கழிப்பில் சிதறிய தன் ஆட்டுப் பட்டியின் கதவை செப்பனிட சில நாள்களின் முன்பு தச்சனைக் கூட்டிக்கொண்டு போனபோது, அந்த வீட்டின் பெண்களில் சிலர் கூட அவனைப் பற்றிக் கிசுகிசுப்பதை உணர முடிந்தது. அந்த அடிக்குரல்கள் தான் மணக்கப் போகின்றவள் கர்ப்ப ஸ்திரியாக இருக்கிறாள் என்பதைத்தான் சுற்றுகின்றன என்பதும் தெரிந்தது. காடி ஏறிய திராட்சை ரசக் குவளையை அவனுக்குத் தந்துவிட்டு இடையன் புளிப்பு உதடுகளால், இது நிச்சயம் சாத்தானின் வேலைதான் என்றும் அதுதான் கன்னிப் பெண்ணின் மீது காற்றை ஏவி சூல் கொள்ளச் செய்துவிடும். காற்றால் கர்ப்ப மானவள் குதிரை தலை கொண்ட குழந்தையையோ, கழுதையின்

காதுகள் உள்ள சிசுவையோ பெறக் கூடும் என்றான். அப்படியும் நடக்கக்கூடுமோ. வீடு திரும்பும்போது தச்சன் ஜோசப் யோசித்தபடி நடந்தான். நகரின் வெளியே எங்கோ நூறு வயதுப் பெண் ஒருத்தி சில வாரம் முன் கர்ப்பமாகி உள்ளாள் என்ற சேதி பரவிய நாளில் பெண்களும் ஆண்களும் அந்த முதிர் கிழவியைத் தேடிக் காண அலைந்தனர். அவளோ மாட்டுத் தொழுவத்தில் ஒளிந்துகொண்டுவிட்டாள். அப்பெண்ணின் கணவன் தெருவில் பிறர் கண் படாமல் இருளில் பதுங்கியபடி நடுங்கிப் போவதை தச்சனும் பார்த்தான். தனக்கும் ஒருவேளை அதைப் போலதான் நேரிடுமோ. யோசிக்க, யோசிக்க சாத்தியங்களின் பாதை விரிந்தது. மணவயது எப்போதோ கடந்து போயிருக்க அவன் நெடுங்காலம் தனியனாக தச்சுப் பட்டறையிலே உழன்று கொண்டிருந்தான். நாசரேத்தில் அவனுக்கு உறவுக்காரர்கள் எவருமில்லை. வெளி உலகின் நடமாட்டம் தீண்டாத தச்சுப் பட்டறையில் நாற்காலிகளையோ, பறவைக் கூண்டுகளையோ செய்தபடி நாள்களைக் கடத்தியிருந்தான். எப்போதாவது அங்கு வரும் குருவி விற்பவள் மட்டுமே அவன் அறிந்த பெண். அவளுக்கு வயது நீண்டிருந்தது. அசதியும், மாயச் சுருள் கண்ணும் கொண்ட சேமாள் என்ற அந்தப் பெண் யாவர் வீட்டு ரகசியமும் அறிந்தவள். அவள் உதடுகள் எப்போதும் மூடிக் கொள்வதே இல்லை. அவள்தான் ஜோசப் மணக்க இருப்பவள் கர்ப்ப ஸ்திரியென முதலில் சொன்னவள். அதைச் சொல்லும் குரலிலே கசப்பு கலந்திருந்தது.

''யார் வழியோ கர்ப்பமாகி இருக்கிறாளாம் மரியாள்.''

அவன் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தான்.

''என்ன சொல்கிறார்கள் தெரியுமா? வான் நட்சத்திரத்தால் கர்ப்பம் கொண்டாளாம்.''

சேமாளின் கூண்டில் இருந்த குருவிகள் டுவிக் டுவிக் எனக் குரலிட்டன. அவள் காய்ந்த ரொட்டித் துண்டு ஒன்றைத் தனது பொதியினின்று எடுத்து தண்ணீரில் நனைத்துக்கொண்டு கடித்தாள்.

''நீ தகப்பனாகப் போகிறாயா?''

அவன் மறுத்துத் தலையாட்டினான். அவள் பகல் தீரும்வரை பேசிக்கொண்டிருந்தாள். அன்று அவன் இரவில் தனித்

திருந்தான். மறுப்பின் ஊஞ்சல் அவன் முன் ஆடியபடியிருந்தது. பெண்களை மட்டும் ஏன் எப்போதும் ரகசியங்கள் கொடி போல சுற்றிப் படர்கின்றன என அவனால் புரிந்துகொள்ள முடிய வில்லை. மரியாளை என்றோ இரு முறை தண்ணீர்க் கிணற்றின் மர உருளையின் முன் கண்டிருக்கிறான். நிசப்தத்தின் வலையைப் போர்த்திக்கொண்டு நிற்பவள் போல இருந்திருக்கிறாள். அவன் எந்தப் பெண்ணின் உள்முகமும் அறிந்தவனில்லையே. அவனால் என்ன செய்வதென முடிவு கொள்ள முடியாமல் இருந்தது. பின்னிரவில் அவன் கனவு கண்டான்.

முடிவற்ற நீண்ட மணற் பாலையொன்று விரிந்தது கனவில். நிசப்தத்தின் பேராறு ஓடிய அப்பெருவெளியில் காற்றை எதிர் கொள்ள முடியாத அயர்ச்சியுடன் அவன் நடந்துகொண்டி ருந்தான். யாரோ தொலைவில் அவன் பாதையில் வருவதாகக் கண்டான். அது ஒரு பெண் என அலைபடும் கூந்தலின் சப்தம் வழி அறிய முடிந்தது. அவள் தன்னைத் தேடித்தான் வரு கிறாளோ எனக் காத்து நின்றான். தொலைவில் இருந்த அந்தப் பெண்ணும் அசையாமல் நின்றாள். இரண்டு தப்படி அவன் முன்னால் நகர்ந்தால் அவளும் இரு அடி முன் வைக்கிறாள். எனினும் அவனை நெருங்கி வரவேயில்லை. குரல் கேட்கும் தொலைவு இடைவெளியில் இருவரும் நடந்தனர். அவள் எதையோ முணுமுணுக்கிறாள் என்பது தெளிவற்று காற்றில் சிதைந்து கேட்டது. அருகாமையில் முகம் காண முடியா அப்பெண் நிழலைப் போல் பின்வந்துகொண்டே இருந்தாள். தன்னைப் பின்தொடரும் அவள் யாராம்? வேட்கை அவன் மனத்தில் சுழித்து உருக்கொண்டது. பின் திரும்பிப் பார்ப்பதும் நடப்பதுமாகக் கனவு நீண்டது. விழித்துக்கொண்டுவிட்டான். கனவின் விநோதம் புரியவே இல்லை. பின் அடுத்த நாள்களில் அதே கனவு திரும்பவும் அவனுள் தொடர விடியும்போது தன்னை துயரத்தின் சிறகுகள் மூடிக்கொள்வதையும் நாவில் துக்கத்தின் அரும்புகள் பூப்பதையும் உணர்ந்துவந்தான். பெண்ணின் மீதான ஈர்ப்பு மெல்ல அவனுள் சலனம் கொள்ளத் தொடங்கியது. ஒரு மதிய வேளையில் மரியாளின் தகப்பன் ஜோசப்பைக் காண வந்தபோது எங்கும் வெயில் விரிந்து கொண்டிருந்தது. எல்லோரின் பேச்சையும் போல மண உறவு முறிந்துவிடக் கூடுமோ என்ற அச்சம் மரியாள் தகப்பன் முகத்தில் நிழலாடியது. அவர் மரியாளைப் பற்றிப் பேசத் தொடங்கியதுமே தான் அறியாது ஜோசப் தன் தொடர் கனவின் பெருவெளியை

நினைவு கொண்டான். எல்லாப் பெண்ணுக்கும் இடையில் இதே இடைவெளி உண்டுமா. அவனுக்கு ஒரே வார்த்தை மட்டும் மரியாள் தகப்பன் பேசியது மனத்தில் சுழன்றது.

''நீங்கள் அவளைப் புறந்தள்ளி விடாதீர்கள்.''

அவன் ஒப்புக்கொண்டுவிட்டான். கர்ப்பத்தில் நூறு இரவுகள் கடந்திருந்த சிசுவுடன் மரியாளைக் கல்யாணம் செய்த நாளில் தன் கனவில் தொடர்ந்தவள் அவள்தான் எனப் பார்த்ததுமே புரிந்தது.

## II

கனவின் விசித்திரங்கள் வாழ்வையும் தொற்றிவிடுவது இயல்பு தானே. மரியாள் வார்த்தைகளற்ற பெண்ணாக இருந்தாள். தச்சுப் பட்டறைக்குள் எப்போதாவது அவள் நடமாடும்போது பலவீன மான அக்கர்ப்பிணியின் கால்கள் நடுங்கிக்கொண்டிருப்பதைப் பார்ப்பான். நாசரேத்தில் மழைக்காலம் தொடங்கியிருந்தது. பகலில் கூட மேகம் இருண்டு சரிகிறது. தெருக்களில் எப்போதும் ஈரவாடை. ஆடுகளின் பம்மிய குரலும் பிச்சைக்காரர்களின் பாடலும் கேட்கும் நாள்கள். ஜோசப் ஒரு கழுதையை விலைக்கு வாங்கிவிட்டான். கழுதை இல்லாமல் பயணம் செய்வது எப்படியாம். ரோம் தேசத்து அதிகாரிகள் ஜனத்தொகைக் கணக் கெடுப்புக்காக யாவரையும் பூர்வ கிராமம் திரும்ப ஆணை யிட்டிருந்தனர். ஜோசப் இனி நாசரேத்தில் இருக்க முடியாது தான். அவன் மரியாளை அழைத்துக்கொண்டு பெத்லகேம் நோக்கிப் பயணம் தொடங்கினான். வழியெங்கும் அவனைப் போலவே பிற தேசங்களுக்கு நகரும் பயணிகள் பாதைகளில் எதிர்ப்பட்டனர். மூக்கு விரிந்த கழுதை மிக மெதுவாகவே நடந்தது. தங்கும் விடுதிகளில் கூட்டம் அதிகமாகி மலைப் புடைவுகளிலும், பாறை மீதும் மக்கள் தூங்கி விழித்தனர். உணவுக்கும் அலைபட நேர்ந்தது. எப்போதும் யோசனை கொண்டவள் போல தலைகுனிந்த மரியாள் மாறும் நிலக்காட்சி களைக் கண்டபடி வந்தாள். செம்போர் மரத்தடியில் உறங்கும் அவளை மங்கிய நிலாவெளியில் கண்டபோது இவள் சூல் கொண்டது வானவருக்கா? இக்குழந்தை ஒரு நட்சத்திரம்தானா என யோசிப்பான் ஜோசப். ஆனாலும் அதை ஒருபோதும் அவளிடம் கேட்டுக்கொண்டவனில்லை. நீலம் படர்ந்த மாலையில் பறவைகளின் துணையில் அவளை விட்டு நீர்க்கிணறு தேடி அலைந்து திரும்பியபோது அவள் தன்

வயிற்றில் விரலைப் படரவிட்டு சப்தமாக எதையோ பேசிக் கொண்டிருந்தாள். யாரோடு பேசுகிறாள்? அவன் அருகாமை கண்டதும் குரல் ஒடுங்கிவிட்டது. வழியில் அவர்களோடு இணைந்துகொண்டவர்களில் இருந்த ஆரூடக்காரீன் ஒருவன் ஜோசப்புக்கு தன் சித்திரக் கட்டில் இருந்து மூன்று சீட்டுகளை எடுக்கச் செய்தான். தன் சிறகைத் தானே அறுத்து கையில் ஏந்திய மனிதன் உருவமும், எட்டு மதுக்கோப்பைகளும், சிறகு முளைத்த குழந்தையொன்றும் வந்தது. ஆரூடச் சித்திரங்களை வாசித்து அவன் ஒரு சிறகு முளைத்த குழந்தையொன்றின் தகப்பனாவான். எனவும் அவன் வாழ்வில் புதிர்களின் குவளை நிறையும், தன் சிறகைத் தானே சுமக்கக் கூடிய துயர் கொண்டவன் ஜோசப் எனவும் கூறியபோது மரியாளும் கேட்டுக் கொண்டிருந்தாள். பெத்லகேம் வந்து சேர்வதற்குள் அவள் கால்கள் வீங்கியிருந்தன. மணலேறிய முகம் கொண்டிருந்தாள். ஜனனக் கணக்கெடுப்புக்காரர்களின் குரல் பெத்லகேமிலும் சுற்றியது. தச்சன் ஜோசப் வீதிகளில் சுற்றி அலைந்தான். பல வருடங்களுக்குப் பிறகு திரும்பிய தன் பூர்வீக ஊர், இன்று அடையாளமற்றதாக உருமாறியிருந்தது. பரிச்சயமான மனிதர்கள் எவரேனும் தென்படுவார்களா எனத் தேடி அலைந்தான்.

விடுதிகளில் நின்ற கழுதைக் கூட்டம் ஒன்றையொன்று வெறித்துக்கொண்டிருந்தன. குடிநீர்க் கிணறுகளிலும் தெரு ஊடேயும் கூட்டம் அலைவுற்றது. இடம் கிடைப்பதற்காக காத்துக் கொண்டிருந்தான். மெல்லிய பனி மூட்டம் நிரம்பிய இரவு நிறைந்தது. பேசும் குரல்களும், மனித வேதனைகளும் ஒடுங்கின. தன் வயிற்றில் உள்ள சிசு உலகின் பெரும் வாசலுக்குள் வந்துவிடும் ஆவலுற்றதாக தன் கால் விரல்களால் கர்ப்பப் பாதையின் மூடிய கதவுகளைத் திறப்பதை உணர்ந்தாள் மரியாள். பகிர்ந்துகொள்ள முடியாத கனமும் வேதனையின் விம்மலும் கூடின. தோளை அழுத்திப் பகிர்ந்துகொள்ள ஒரு பெண் இல்லையே என மனம் துவண்டது. அவளுக்கு திடீரென ஜோசப்பே ஒரு பெண் போலதான் இருந்தான். நடு வயதை எட்டியும் மணமாகாத ஸ்திரியின் பரிசுத்தமும், அர்ப்பணிப்பும் கொண்ட அந்த மனிதன் உறக்கமற்றவனாக அவள் அருகில் அமர்ந்திருந்தான். எதற்காக இத்தனை அர்ப்பணிப்பு கொண்டவனாகக் காத்திருக்கிறான். அவள் உதடுகள் முணுமுணுத்தபடியிருந்தன. மரியாளால் எதையும் நினைவுகொள்ளக் கூட இயலவில்லை. ஜோசப் அவள் முகத்தில் தோன்றி ஊடாடுந்

துயரைத் தெரிந்துகொண்டுவிட்டான். தருணம் வந்துவிட்டது. இரவில் மூடிய தெருக்களுள் அவன் வேகமாக அலைந்தபடி எங்காவது மறைவிடங்கள் தென்படுகின்றனவா எனப் பார்த்தபடி நடந்தான். சாணத்தின் வாடை பரவிய அந்த மாட்டுத் தொழுவத்துக்கு அவளைக் கூட்டி வந்தபோது இரவு நீண்டு கொண்டிருந்தது.

பிறக்கப்போகும் குழந்தை பெண்ணாகத்தான் இருக்கக் கூடும் என ஜோசப் மனதில் தோணியது. இடையர்களில் மூத்தவன் சொன்னது போல ஒருவேளை கழுதையின் காதுகளோடு பிறந்து விட்டால்? அவன் பனியில் அமர்ந்திருந்தான். உடைந்த குரலும் அழுகையொலியும் முயங்கிய தொழுவத்தில் குழந்தையின் சப்தம் கேட்டது. அவசரத்தோடும், கலக்கம் தெளியாதபடியும் ஜோசப் முன் சென்று பார்த்தபோது வைக்கோல் தாள் படர்ந்த குழந்தையொன்று தெரிந்தது. அதைக் குனிந்து பார்த்தான். ஆண் குழந்தை. மரியாளின் பழுத்த இமைகள் தாழ்ந்திருந்தன. அசதியும் நோவும் கொண்ட அவளுக்காக ரொட்டித் துண்டு களைத் தேடி நகர வீதிகளை நோக்கிக் களைத்துப் போனான். முதல் பார்வையிலே அந்தக் குழந்தையின் முகம் அவனுள் புதைவு கொண்டது. வெறுப்பும் வசீகரமும் ஒரே அணையில் அவனிடம் சுரந்தது. விடுதியொன்றின் பாதி திறந்த கதவு களுக்குள் நுழைந்து யாருமற்ற மரமேஜையின் முன் அமர்ந்தபடி அவன் குடித்தான். பனிக்காலத்தின் விடியற்பொழுது எப்போதும் வெண்ணிறம் ததும்ப மலர்கிறது. அவன் திரும்பியபோது இடையர்களில் சிலர் அந்தக் குழந்தையைப் பார்த்தபடி இருந்தனர். யாரோ சிலர் குழந்தையிடம் உப்பின் வாசனையைக் கண்டதாகப் பேசிக் கொண்டனர். கிராமப் பெண்களில் ஒருத்தி உறங்கும் குழந்தையையும் மரியாளையும் கண்டபடி, அக்குழந்தையின் தகப்பனானவன் எங்கே எனக் கூட்டத்தில் கேட்டபோது, ஒருவன் ஜோசப்பைப் பார்க்க, அவன் தலையை குனிந்தபடியே சொன்னான்.

''குழந்தையின் தகப்பன் நானில்லை.''

ஒதுங்கிய வீதியொன்றில் மிகச் சிறிய வீட்டை அவர்களுக்காக அமர்த்தியிருந்தான். மரக் கதவுகளும், பலகை அடைப்பும் கொண்ட அந்த வீடு, புறாக் கூண்டை ஞாபகப்படுத்தியது. குழந்தை பிறந்த ஐந்தாம் நாளில் ஜோசப்புக்கு நீண்ட நாளின் பின்பு ஒரு கனவு வந்தது. அதே பாலையின் பெருவெளி.

இப்போது மணற்பரப்பில் முன்னே போய்க்கொண்டிருப்பவள் பெண். அவளது பாதையைத் தொடர்ந்து போய்க் கொண்டி ருந்தான் ஜோசப். மாறாத அதே இடைவெளி. மாற்றி வைக்கப் பட்ட காய்களைப் போல கனவு சுழன்று இடமாற்றம் கொண்டு விட்டதா? இம்முறை முன்னால் போகின்றவளின் நடைக்கு ஏதுவாக அவன் தவிப்புடன் நடக்க வேண்டியிருந்தது. முன்னே செல்பவள் தனக்கு நிழல் போல வருபவன் பின் தொடரு கிறானோ எனக் கூடத் திரும்பிப் பார்க்கவில்லை. அவள் பாதையினின்று விலக முடியாத அரூப ஈர்ப்பு அவனை முன் நடத்திக்கொண்டிருந்தது. உலர்ந்த நாவும், எரியும் சூரியனுடன் வெம்மை தாங்காது மண்டியிட்டு தலை உயர்த்தும்போது விழித்துக்கொண்டான். மரியாளும் ஏதோ கனவில் விழிப் புற்றவள் போல் அமர்ந்திருந்தாள். குழந்தையின் கேசத்தைக் கலைத்தபடி அவனிடம் சொன்னாள்.

''குழந்தைக்கு இயேசு எனப் பெயரிட வேண்டும்.''

எட்டாம் நாளில் ஜெருசலேத்தின் ஆலயத்துக்குள் இரண்டு புறாக் குஞ்சுகளை பலியாகக் கொடுத்துப் பெயரிட மரியாளுடன் கல் படிகளில் நடந்தபோது வயதான ஸ்திரி ஒருத்தி குழந்தையைக் கண்டதும் ஆரவாரித்தபடி குரலிட்டாள்.

''இதோ வானவர், காற்றின் குழந்தை.''

ஜோசப் முகத்தில் வன்மமும் வேதனையும் குழைந்து நிரம்பின. அவன் ஆலயத்தினுள் அவசரமாகச் சென்றான். பிச்சைக்காரர் களின் சங்கீதம் வெளியே பெருகிக்கொண்டிருந்தது. வெளியே வரும்போது ஜோசப்பைப் பார்த்த துரோகி ஒருவன் கத்தினான்.

''கள்ளக் குழந்தைக்குத் தகப்பன் இவன்.''

வீடு திரும்பிய பின்பும் ஜோசப்புக்கு மரியாளின் மகனைப் பெயர் சொல்லி அழைக்க வேண்டும் என்று தோன்றவேயில்லை. அவன் கசப்பில் மூழ்கியிருந்தான்.

## III

மூன்று வான சாஸ்திரிகள் குழந்தையைப் பார்த்துவிட்டுத் தந்ததாக மரியாள் சொன்ன அந்தப் பொருள்களைக் கண்டான் ஜோசப். வெள்ளிப் பேழையும் சாம்பிராணியும் பொன்

துண்டுகளும் அங்கிருந்தன. யார் அவர்கள். எதற்காகக் குழந்தையைப் பார்க்க வர வேண்டும். மர்மத்தின் சுழிப்பு குழந்தையின் உடலில் ஓடுகின்றதோ? அவன் அந்த வான சாஸ்திரிகளைப் பற்றித் தெரிய ஆர்வம் காட்டவில்லை. ஆனாலும் அந்த வான் அறிஞர்கள் வந்துபோனதன் பின்பு சேவகர்கள் அவன் செல்லும் பாதைகளில் ஒளிந்து பின் தொடர்வதும், ரகசியமான குரலில் அவனைப் பற்றிப் பேசிக் கொள்வதாக இருப்பதை உணர முடிந்தது. ஏரோது அரசனின் சிப்பாய்கள் தன்னைத் தொடரக் காரணம்தான் என்னவெனப் புரியவில்லை. மூத்த தச்சன் ஒருவனின் பட்டறையில் வேலையில் இருந்தான் ஜோசப். அங்கும் சிப்பாய்களின் கண்கள் ஒளிர்ந்துகொண்டிருந்தன. முதன்முறையாக பயம் அவனிடம் துளிர்விடத் தொடங்கியது. தன் பின்னே உளவாளிகளின் நடமாட்டம் எதற்காகவாம். அச்சம் தருவதாகவே இருந்தது. இரவில் தனியாக கல்தளம் பாவிய தெருவில் நடந்து திரும்பியபோது மஞ்சள் கலந்த கண்களுடன் எதிர்ப்பட்ட அரசாங்க வீரன் அவனிடம் இறுகிய குரலில் கேட்டான்.

''வான சாஸ்திரிகள் கண்ட குழந்தைக்குத் தகப்பன் நீதானே?''

''நானில்லை'' என்றபடி அவன் வேறு தெருவில் நுழைந்து அலைந்தான். வீடு திரும்புவதே நெருக்கடியாகிப்போனது. சப்தம் ஓய்ந்த நள்ளிரவில் வீடு திரும்பியபோதும் படபடப்பு அடங்கவில்லை. வீட்டின் கதவுகள், ஜன்னல்கள் எல்லா வற்றையும் மூடி வைத்தபடி உள் அமர்ந்துகொண்டான். மரியாளும் வெளிறிப்போயிருந்தாள். வீட்டின் புறவெளியில் உளவாளிகளின் நடமாட்டம் தென்பட்டிருக்கக் கூடுமோ. எதற்காக சந்தேகிக்கப்படுகிறோம் என அறியாமலேயே பயம் அவனைக் கவ்விக்கொண்டது. பகல் நேரங்களில் தச்சகத்துக்குச் செல்லாமல் தெருவில் குறுக்கு ஊடாக நடந்து திரிந்தான். அவன் மனது விபரீதத்தின் வாசனையை நுகர்ந்துகொண்டிருந்தது. யோசனையின் பின்பு மரியாளைக் குழந்தையுடன் அழைத்துக் கொண்டு கிழ வேசியொருத்தியின் குறுகிய அறையொன்றுக்கு மாறினான். அவன் நினைத்தது போலவே அன்று வீரர்கள் அவனிருந்த வீட்டின் கதவுகளைச் சிதைத்திருந்தனர். அயல் வீடுகளிலும் அவர்களைத் தேடி கேட்கப்பட்டன. பயத்தின் மஞ்சள் பூக்கள் உடலெங்கும் பரவின. நகரை விட்டே வெளியேறிவிட வேண்டியதுதானா? பின் பனிகால இரவில்

மரியாளை அழைத்துக்கொண்டு வேறிடம் தேடி மாறி அலைந்து கொண்டிருந்தான். பெருகிய நட்சத்திரங்களைக் கண்டபடி கடந்தன குழந்தையின் கண்கள். பகலும் இரவும் ஒளிந்து அலைய வேண்டியதாகியது. பிறந்து பால் குடி மறக்காத குழந்தைகளில் ஒன்றை அரசாணையின் பேரில் வீரன் ஒருவன் வாள் தாக்கி வெட்டிய பகலில் சாவின் விரல்கள் நகரில் தாளமிடத் தொடங்கின. பின் அந்த நகரெங்கும் சிசுக்களின் முடிவற்ற இறப்பும், பெண்களின் துக்க ஒலியும் தீவிரமாயின. சாவின் கால் பதியாத குழந்தைகளே இல்லை. ஜோசப் அறிந்துகொண்டு விட்டான். அவர்கள் புனிதரைத் தேடுகிறார்கள். தன் எதிரில் இருக்கும் இந்தக் குழந்தையின் பொருட்டு இத்தனை மரணமா? இடையர்கள் சொன்னது போல இது துரதிருஷ்டத்தின் குழந்தை தானோ. அவனுக்குப் புரியவில்லை. ஆனால், தான் அடை யாளம் காணப்பட்டால் கொல்லப்படுவான் என்பது மட்டும் புரிந்தது. தங்கள் குழந்தை எதன் பொருட்டு இறந்தது என்பது கூட அறியாத தாயின் விம்மல் தெருவெங்கும் சுடரிட்டது. குதிரை களின் குளம்பொலியும், ரத்தம் தோய்ந்த வீரர்களின் கத்திகளும் நகரமெங்கும் பயத்தின் விளைவுகளைத் தூவியபடிச் சென்றன. மரியாள் நடுங்கும் உதடுகளுடன் அவனிடம் கேட்டாள்.

''என் குழந்தையைக் கைவிட்டுவிடப் போகிறீரா?''

அவன் கோபம் கொண்டவனானான். என்றாலும் அவளது கேள்வியின் உள்புதைந்த பயம் அவனைப் பேசவிடாமல் செய்தது. அவன் ஒரே பதில் சொன்னான்.

''எகிப்தை நோக்கிப் போகப் போகிறோம்.''

ரகசியமாக நகர் நீங்கி பயணித்த நாளில் அவர்கள் பேசிக் கொள்ளவும் இல்லை. மரணத்தின் சுவையறிந்த செம்பருந்து களில் சில ஆகாசத்தின் உயர்வில் வட்டமடித்துச் சுழன்றன. உயிராசையில் மூவரும் கடந்துகொண்டிருந்தனர்.

## IV

படகுகள் கட்டப்படும் தச்சுப் பட்டறையில் வேலையில் இருந்தான் ஜோசப். முன் அறியாத தேசமாயிருந்தது எகிப்து. சொந்த ஊரினின்று வெகு தூரம் வந்தபோதும் ஏரோதின் வீரர்கள் பற்றிய பயம் கலையவில்லை. எகிப்தில் பஞ்ச காலம் தொடங்கி யிருந்தது. தானியங்களுக்காக மக்கள் அலைந்து திரிந்தனர்.

கூக்குரலும் கசப்பான சம்பவங்களுமே தினசரியாகிப் போயிருந்த நாள்கள் அவை. மரியாளின் மகனுக்கு ஆறு வயதாகியிருந்தது. பேசக் கற்றிருந்தபோதும் அச்சிறுவன் எப்போதும் மௌன மாகவே இருந்தான். அவனுக்கும் தாய்க்கும் ஊடே எப்போதாவது நடக்கும் பேச்சும் கூட அடுத்த காது அறியாதபடியே இருந்தது. கூர்மையான கண்களும், நீள்முக அமைப்பும் கொண்ட அச்சிறுவன் மிகவும் இறுக்கமானவனாக வளர்ந்துவந்தான். ஜோசப் வேலை யில் ஈடுபட்டுக்கொண்டிருப்பதை பல சமயம் பார்த்துக்கொண்டே இருப்பான். அவனை நேசிக்கவோ, வெறுக்கவோ முடியாத ஊசல் ஜோசப்பிடமிருந்தது. ஆயினும் அச்சிறுவனின் ஈர்ப்பு அவனை உள்முகமாக அழைத்துக்கொண்டே இருந்தது.

மரியாளை விடவும் தனக்குள்ளாகவே மூடிக்கொண்டிருந்த அந்தச் சிறுவன் ஜோசப்பை ஒருபோதும் தகப்பனாக அழைக்கவே இல்லை. தச்சனும் மரியாளின் மகனே என எப்போ தாவது அழைப்பதோடு, பெயர் சொல்லி அழைக்கவும் கூச்சம் கொண்டிருந்தான். பஞ்சம் நீண்டுகொண்டிருந்ததால் தினமும் கள்வர்களும், நோயாளிகளும், நடைபாதை ரோகிகளும் அலைந்து திரிவதைக் காண முடிந்தது. கலைந்து கலைந்து உருமாறிக்கொண்டிருக்கும் தெருவில் எதிர்ப்படும் வேசி களையும், மூடவாதக்காரர்களையும், மதுவெறி ஏறிய கள்வர் களையும் கவனித்தபடியிருந்தான் மரியாளின் மகன். ஜோசப் அவனை சில சமயம் பார்த்துக்கொண்டே இருப்பான். எதைத் தான் கவனித்துக்கொண்டிருக்கிறான். இக்கூச்சல் இவனுக்கு ஏன் இத்தனை வசீகரமாகத் தெரிகிறது. அச்சிறுவன் யாரோடும் ஒட்டாதவனாகவே வளர்ந்தான்.

ஒரே வீட்டில் வசித்தபோதும் மரியாளை ஜோசப் ஒருபோதும் அறியவேயில்லை. எப்போதாவது மிதமீறிய தனிமையில் அவளைப் பற்றி நினைப்பதுண்டு. எதற்காக அவள் இன்னமும் தன்னைச் சுற்றிய கன்னிமையின் வலையை விலக்காமல் இருக்கிறாள். தன்னோடு ஒரே அறையைப் பகிர்ந்துகொண்ட போதும் அவள் தன் மனைவியில்லையா? நாள்களின் வேகத்தில் தான் ஒரு பெண்ணோடு வாழ்கிறோம் என்ற நினைவு கூட அவனிடமிருந்து பிரிந்துபோனது.

சிறுவன் இயேசு தனியே அலைந்து திரியத் தொடங்கினான். காற்றாலும் சிதைவுற்ற வீடுகளாலும் வசீகரிக்கப்பட்டவனாக

வீதிகளில் சுற்றினான். அவனுக்குப் பாதைகளின் மீது பெரும் ஈர்ப்பு இருந்தது. எகிப்துக்கு வரும் பிற தேசவாதிகளின் பாதைகளை அவன் அறிந்துவந்தான். அவனுக்கு நண்பர்களே இல்லையோ எனும்படியானது. ஆனாலும் அவன் ஏலச் சந்தையில் அலைந்து திரியும் கானான் தேசப் பெண் துரோகி ஒருத்தியின் பார்வையற்ற மகனுடன் நட்பு கொண்டிருப்பதை தச்சன் ஜோசப் ஒரு முறை கண்டான். நோயுற்ற ஸ்திரி திடலின் பின்புறமிருந்த குதிரை லாயமொன்றில் தங்கியிருந்தாள். பார்வையற்றவனாகியிருந்த போதும் அச்சிறுவன் சப்தமிட்டோ, விரல் தடவியோ வழி கேட்பதேயில்லை. எதிரில் உள்ளதை உணர்ந்துகொள்பவனாக வளர்க்கப்பட்டிருந்தான். நெபு என்ற அந்தச் சிறுவனுடன் நடந்து அலையும்போது மரியாள் மகனுக்குப் பொருள்களின் வேறு ரூபங்கள் தென்படத் தொடங்கின. நெபு பல தேசங்களையும் கண்டிருக்கிறான். தொலைவில் பறக்கும் பறவைகளைக் கூட தன் உள் உணர்வின் வழி என்ன பறவையது என்றும் அறிபவனாக இருந்தான்.

ஆற்றின் கரையோரமாக நெபுவோடு நடந்துபோனபோது மரியாளின் மகன் கேட்டான்.

''எதிரில் இருப்பது என்னவெனத் தெரிகிறதா?''

நெபு உடனடியாக பதில் சொன்னான்.

''ஒளி ஓடிக்கொண்டிருக்கிறது.''

இயேசுவுக்குப் புரிந்தது போல இருந்ததென்றாலும் கேட்டான்.

''தண்ணீர் இல்லையா?''

நெபு தன் பதிலை உறுதியாகச் சொன்னான்.

''தண்ணீரை நாம் காண முடியாது. நாம் பார்ப்பது ஒளி.''

அறியப்படாத தண்ணீரின் முணுமுணுப்பைப் பேசியவாறு அன்று நடந்தனர். பின் ஒரு வேளை தினா குருவிகளை விற்கும் முதியவனின் முன்பாக, வானத்தின் பரிச்சயம் விடுபட்ட குருவிகளுக்கு துயரம் இருக்காதா எனப் பேசியபோது நெபுவின் பதில் விசித்திரமாக இருந்தது.

''குருவிகள் எதையும் ஆசைகொள்வதுமில்லை, ஞாபகம் வைத்திருப்பதுமில்லை.''

நெபு தன் தாயைக் கூட்டிக்கொண்டு பகல் முழுவதும் அலைவான். இந்த நகரம் அவனுள் வரைபடம் போல விரிந்திருந்தது. ஸ்நேகத்தின் பிடி இறுகியபடி நீள இயேசு அந்தச் சிறுவனோடு பேசக் காத்திருந்தான். குதிரை லாயத்துக்கு தன் தாயின் உறவுக்காரப் பெண்ணைக் காட்ட கூட்டிப் போனான் நெபு. முதிர் வயதாகிக் கிழப் பெண்ணான அவள் கண் இமைகள் தொங்கிக்கொண்டிருந்தன. அவள் சிறிய குவளையில் உலர்ந்த திராட்சைகள் சில வைத்திருந்தாள். வயது அவள் உடலெங்கும் வளையமிட்டிருந்தது. அவளுக்கு வான்கோழியைப் போல முகமிருந்தது. மரியாளின் மகனைத் தன் நீண்ட விரல்களால் தொட்டபோது சொன்னாள்.

''இவன் உப்பைப் போல இருக்கிறான்.''

பிச்சைக்காரர்களின் அந்தரங்க உலகினுள், விளிம்பில் பதுங்கி வாழும் மனிதர்களின் இருண்ட தினசரி வாழ்வுக்குள் அந்தச் சிறுவர்கள் இருவரும் நடந்து அலைந்தனர். பசியின் பெருநாக்கு அங்கு சுழன்றபடியாக இருந்தது. ஆறுதல் வேண்டிய குரல்கள் எங்கும் வெடித்தன. உலகம் துயரத்தின் கூடாரம் போல இருந்தது. தான் தேடி வந்தபோதும் இரண்டு நாள்களாக நெபுவைக் காணாது அலைவு கொண்டான். நெபு நதியின் அருகாமையில் இருந்தான். நோயுள்ள அவனது தாய் இறந்திருந்தாள். சவ அடக்கத்துக்கும் வழியற்றவர்களாக அவளை நதியில் தூக்கி எறிந்து போயினர். நெபு மென்குரலில் சொன்னான்.

''மரணத்தின் நீண்ட வாள் எல்லோரின் தலை மீதும் தொங்கிக்கொண்டு இருக்கிறது.''

தாயின் இறப்பு நெபுவை இறுக்கவில்லை. அவன் முகம் சந்தோஷம் கண்டவன் போலதானிருந்தது. நெபு தண்ணீரைக் காட்டினான். மீன் குஞ்சுகள் அலைந்தன.

''தண்ணீரில் தவழும் நூற்றுக்கணக்கான மீன்களாகிவிட்டாள் என் தாய். இனி நதியெங்கும் அவள் இருப்பாள்.'' அதன்பின்பு நெபு, யாரிடத்தும் சொல்லாது பயணிகள் கூட்டத்தோடு நகரை விலக்கிப் போய்விட்டான். பிரிவின் கொடி சுற்றிய மரியாளின் மகனும் மறுநாள் காணாமல் போயிருந்தான்.

## V

தேடிக்கொண்டு போனார்கள் அந்தச் சிறுவனை. மாலையின் கூச்சல் நீண்ட தெருக்களில் அவனைத் தேடி அலைந்தான் தச்சன் ஜோசப். சந்தை வியாபாரிகளும் சூதாட்டக்காரர்களும் நிறைந்த விடுதியில் தேடி அலைந்தபோதும் அவனைக் காண இயல வில்லை. அவன் காணாமல் போனதுமே மரியாளின் குரலில் அச்சம் கலந்தது.

''யாராவது அடிமையாகப் பிடித்து விற்றுவிடப் போகிறார்கள்.''

அடிமைகளின் வியாபாரம் நடக்கும் பொது மேடைகளின் பின் பகுதியில் சிறுவர்கள் கூட்டமாக அமர்ந்திருந்தனர். மொட்டை அடிக்கப்பட்ட தலையும், பருத்த விழிகளும் கொண்ட அந்தக் கறுப்பு உருவங்களின் ஊடே மரியாளின் மகனும் இருக்கிறானா எனத் தேடினான். இருள் படிந்த மது விடுதிகளின் சுவர்களுக்குள் கூட அடிமைச் சிறுவர்கள் கைமாற்றப்படுவார்கள் எனக் கேள்வியுற்ற செய்தி வழி அவன் மது விடுதியின் ரகசியக் கதவுகளைத் திறந்து உள்ளே அலைந்தான். எங்கும் மதுவின் நெடி சுழன்றது. தச்சன் ஜோசப் அடிமை வியாபாரிகளில் ஒருவனோடு உள் அறைகளுக்குள் போனான். எங்கும் பெண்கள், நிர்வாணி களாக, ஒரே அறையில் படுக்கக் கூட இடமற்றவர்களாகச் சுருண்டு ரயில் பூச்சிகள் போலக் கிடந்தனர். இரவெல்லாம் நகரின் விடுதி விடுதியாகத் தேடி அலைவுற்றான். அந்தச் சிறுவன் எவர் வழியாவது கப்பலில் கடந்து போயிருக்கலாமோ, அல்லது எவர் படுக்கை அறையில் மதுக்கிண்ணம் நிரப்பும் ஊழியனாக நியமிக்கப்பட்டிருப்பானோ. குழப்பத்தின் வால் சுழன்றது. அன்றிரவு ஜோசப் தனியே வீடு திரும்ப மனமற்றவனாகக் குடித்துக்கொண்டே இருந்தான். விசித்திரமான கதவுகளைத் தட்டித் தேடி, அலையும் அன்றைய நாள் முடிவுறும் வேளையில் அவன் வீடு திரும்பியபோது மரியாளும் அந்தச் சிறுவனும் உறங்கிக்கொண்டிருந்தனர். ஜோசப்பின் வருகையொலி அறிந்த அவள் மகன் உறக்கத்தினின்று விழித்து அவனைப் பார்த்து மெலிதாகப் புன்னகைத்தான்.

## VI

பெத்லகேம் வழியில் சந்தித்த ஆரூடக்காரனை நீண்ட நாள் களுக்குப் பிறகு எகிப்தில் சந்தித்தான் தச்சன் ஜோசப். ஆரூடக்காரன்தான் அதையும் அடையாளம் கண்டவன்.

யூதேயாவின் ஏரோது ராஜன் இறந்துவிட்டான் என்றான். அவனது வாழ்நாளின் முடிவில் துர்சொப்பனங்கள் அவன் மீது சுழன்றதாகவும், அதினின்று மீளமுடியாமல் இறந்து போன தாகவும் சொன்னான். ஏரோது ராஜனின் உடலில் இறந்த குழந்தையின் வாசனையை முதலில் கண்டவன் அவனது பட்டத் தரசி. நாளுக்கு நாள் ஏரோதின் உடலில் அந்தப் பிணவாடை பெருகியபடி வந்ததென்றாள். தானே அந்த துர்வாசனையை நுகர்ந்தாள் என்பதால், மீளமுடியாத அந்த துர்வாசனைக்குப் பயந்தவளாக, தைலவாசனை கொண்ட நீர்க்குளியல்களும், நறுமண திரவியமும் பூசி தன் உடலை ஒருமிக்கச் செய்தபோதும் சாவின் வாசனை அவள் தொலைவில் வரும்போதே வீசத் தொடங்கி விட்டதையும், தன் உடலில் உள்ள மனக் குழப்பத்துக்கு தட்டிப் போக மரணத்தின் நிஜவாசனையை நுகர்ந்துவிட்டான். கால்வாய் வழியே வடியத் தொடங்கியது. அந்த ஆரூடக்காரன் தன் குரலை மெதுவாக்கிக் கேட்டான்.

''வானவர் நலமாக இருக்கிறாரா?''

அவன் குறிப்பிடுவது மரியாளின் மகனை என அறிந்தபோதும் ஜோசப் இறுக்கமான குரலில் சொன்னான்.

''என்னோடு அப்படி யாருமில்லை.''



நாசரேத்துக்குத் திரும்பி வந்தனர். எகிப்தினின்று முற்றாக மாறியிருந்தது ஊர். இயேசுவுக்குப் பன்னிரண்டு வயதாகிக் கொண்டிருந்தது. மரியாள் யாரிடமும் சொல்ல முடியாத மனத்தின் ரகசியங்களைத் தனியே பின்னிக் கொண்டபடி நாள்களைக் கடத்தி வந்தாள். தனது வேலைகளைத் தவிர வேறு எதிலும் ஆர்வமற்றவனாகிப் போயிருந்தான் தச்சன். அலைச்சலும் மூப்பும் அவனையும் கவ்விக்கொண்டு இருந்தன. வெயில் காலத்தில் அவனைத் தேடி வரும் இடையர்கள் சிலருடன் எப்போதாவது வெளியே போவதைத் தவிர்த்ததால் அவன் தச்சுக் கூடத்திலே கிடந்தான். கோடைக் காலத்தின் உக்கிரம் மழையாக மாறி உருக்கொண்ட நாளில் அவன் எவனையோ சந்திக்க நகரின் புறவெளிக்குச் சென்றான். உரத்த மழையும், காற்றும் பரவிய புறவெளியில் காற்றில் சிக்கிக் குரலிட்டன சேவல்கள். ஈரத்தின் ஊடே அலைந்தபோது வானின்று இறங்கி வரும் பெரும்

மின்னலின் வடிவத்தைக் கண்டான். அது ஒரே பாய்ச்சலில் பூமியைக் கண்டது. மரங்களின் சதையைப் பிய்த்து நிலத்தை ஊடுருவிச் சென்ற அந்தப் பேரொளியில் வீழ்ந்து கிடந்தான் தச்சன். இடையர்களில் ஒருவன் அவனைத் தூக்கி வந்தான். முதலாக மரியாள் அவனைக் கண்டபோது பயம் கொண்டாள். இறந்துவிட்டானா? ஒளியின் பெருவளையம் சுற்றிய அவன் உடல் நடுக்கம் கொண்டபடியிருந்தது புலப்படும். அச்சமும் மாறி மாறிச் சுழன்றன. விழிப்பதும் சில நிமிஷங்களில் மீண்டும் கண் மூடுவதுமாகத் தொடர்ந்து அவன் முன் அமர்ந்திருந்தாள் மரியாள். இரவில் அவனைக் கண்ட மரியாள், ஒரே வீட்டில் யாரோடும் உறவற்ற மூவர் வாழ்ந்து வருவதன் பொருள்தான் என்ன என யோசனை கொண்டாள். தனிமையின் சுவர் அவர்களின் ஊடே வளர்ந்து நின்றது. பிதற்றலான இரவில் அவன் மனத்தின் உள் ஒளிந்த வாசகங்கள் வெளிப்பட்டன. அவன் மரியாளின் மகனைப் பெயர் சொல்லி அழைத்தான். தான் அவனது தகப்பனென அழைக்கப்பட வேண்டுமெனப் பிதற்றினான். வெயில் பிரகாசித்த மறுநாளில் அவன் புத்துயிர் கொண்டவன் போல எழுந்து நடமாடத் தொடங்கினான். பால்ய வயது கடந்துவிட்ட மரியாளின் மகனுக்கு வாலிபத்தின் ரேகைகள் ஓடத் தொடங்கியிருந்தன.

•

திரும்பவும் வீட்டினின்று வெளியேறி காணாது போயிருந்தான் மரியாளின் மகன். மின்னலின் வளையங்கள் சுற்றிய அசதி கொண்ட ஜோசப் பலவீனமான மனிதனாக இருந்தான். மரியாளின் பிரியத்தின் முடிச்சுகளை அவிழ்த்துக்கொண்டு போயிருந்தார் இயேசு. இம்முறை அவனைத் தேடிக் காணச் செல்லவில்லை மரியாள். தனியே கண்ணீர் விடவும் இல்லை. நத்தையைப் போல தனக்குள் சுருண்டுகொண்டு விட்டாள். ஆனால் அவனது பிரிவு தச்சன் ஜோசப்பின் மனத்தில் நீண்ட விரிசலை உருவாக்கியது. அவன் யோசித்தபடி இருப்பான். ஒருவேளை பலரும் சொல்வது போல அவர் புனிதரா? அவன் தன்னோடு ஸ்நேகமற்றவனாகப் போயிருக்கக் கூடும். ஒரு புனிதராக ஸ்நேகிக்க இயலாதவனாகி விட்டேனா. இல்லை புனிதர் தன்னைப் புறம் ஒதுக்குகிறாரா? நினைவு தப்பி இடம் மாறியது. பிறப்பு முதலே இயேசுவின் பொருட்டு அலையுற்றதின் பின் காட்சிகள் விரியத் தொடங்கின. தன்னைப்

பிரிந்துபோன இயேசுவுக்காக ஏங்கினான் ஜோசப். ஒருவேளை அவன் தான் வாலிபத்தில் இருப்பதைப் போல இருக்கிறான் என்பதால் ஈர்ப்பு பெருகுகிறதா? இடையர்களிடம், பயணிகள் வழியிலும் இயேசுவைத் தேடி விசாரித்தான் ஜோசப்.

அடையாளமற்ற ஏதோ நிலவெளியில் அந்த வாலிபன் அலைந்து திரியக் கூடுமோ. நிசப்தம் கொட்டிய மரியாளின் வீட்டுக் கதவுகள் கூட துயரமேறி இருந்தன. நினைவின் ரகசிய அறைப்படிகளில் இறங்கி இறங்கி இயேசுவின் பிரியத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தான் தச்சன் ஜோசப். பனிக்காலம் நினைவுகளைப் பெருக்குகிறது. தான் புனைத்து வைத்த நேசம் கசிவதை உணர்ந்த தச்சன் வீட்டில் இல்லாதுபோன இயேசுவின் பெயரை மெது வாகக் குரலிட்டபோது, அது மரியாளின் காதில் வீழ்ந்திருக்கக் கூடும். அவள் கண்கள் திரும்பின. உன் மகன் புனிதர்தானா? எனக் கேட்க விரும்பியவன் போல ஜோசப் உதடுகள் நடுங்கின. அவன் கேட்கவில்லை. நலிவுற்ற உடல் மிகுந்த அசதி கொண்டது. மீண்டும் ஒரு கனவு கண்டான். அதே மணல்பரப்பு. தன் முன்னே நடந்து செல்பவன் மரியாளின் மகன். அவனைப் பின்தொடர்ந்து போகிறான் ஜோசப். இருவருக்குமான இடைவெளி விரிவதும் நெருங்குவதுமாக இருக்கிறது. இயேசுவானவர் பின் திரும்பி ஜோசப்பை நோக்கி எதையோ சொல்வது கேட்டது. காற்று அக்குரலைச் சுழற்றிச் சிதறியது. அக்குரல் திரும்பவும் அருகில் வரும்போது கேட்டுவிட ஆவலுற்றவனாகத் தலையைச் சிலுப்பிக் கனவினின்று விழித்த தச்சன் ஜோசப் யாரிடமோ பேச முயன்றவன் போல உதடு திறந்து பேசாமலே இறந்துபோனான்.

•

பிரசங்கத்துக்காக தனது சீடர்களுடன் அந்த ஊருக்குள் பிரவேசித்திருந்தார் இயேசு. இடையர்கள் நிரம்பியிருந்தனர். பாறைகளின் மீதேறி அவர் பேசிய பின்பு கூட்டம் கலைவுற்றது. தன் சீடர்களுடன் வழியில் நடந்த இயேசுவின் அருகில் வந்த இடையன் ஒருவன் கேட்டான்.

''நீ தச்சன் ஜோசப்பின் மகன்தானே.''

அவர் இடையனுக்கு பதில் சொல்ல முயன்றவரைப் போலப் புன்னகைத்துவிட்டு நிற்க, சீடர்களில் பேதுரு சொன்னான்.

'இவர் தேவகுமாரன்.'

பதிலால் திருப்தியுறாத இடையன் கடந்து போய்விட்டான். இருப்பிடம் திரும்பிய இயேசுவின் காதில் இடையனின் குரல் திரும்பவும் கேட்டது. செம்பறையின் நிழலைப் போல ஜோசப் தன்னைத் தாங்கியிருந்ததின் நினைவு விரிந்தது.

அதிசயங்கள் நிகழ்த்திக் காட்டுகிறார் இயேசு எனச் செய்தி எங்கும் பரவியிருந்தது. அவரால் பார்வை தரப்பட்டவனும், முடவாதக்காரனும் கண்டவர்களாக மக்கள் பிரசங்கத்தினின்று திரண்டிருந்தனர். அவர் பறவைகளைப் பற்றிப் பேசத் தொடங் கினார். வந்திருந்த மக்கள் கூட்டத்துக்குள் உணவும் தண்ணீரும் தந்துபோன சீடர்களில் சீமோன் பிளவுற்ற பாறையடியில் நின்றிருந்த ஒருவன் முன் வந்தபோது, நின்றிருந்தவனின் முகத்தை எங்கோ கண்டவன் போல திகைப்புறும் முன்பு, அவ்விடத்தில் அந்த மனிதனில்லை. போயிருந்தான். அங்கு வந்து நின்றவன் தச்சன் ஜோசப்தானே. அவன் இறந்து போனவனில்லையா? எப்படி திரும்பி வந்தான். மறு உயிர்ப்பு கொண்டுவிட்டானா? சீமோனுக்குப் புரியவில்லை. ஆனால் அதன் பின்பு பிரசங்கத்தினுள், தெருக்களிலும் தச்சன் ஜோசப்பைக் கண்ட பல சீடர்களும் அதை இயேசுவிடம் சொல்லவே இல்லை. தாங்கள் பார்த்த ஜோசப்பின் முகம் தவிப்பின் தீவிரம் கொண்டு இருந்தது ஏன் என மட்டும் அவர்களுக்குப் புரியவே இல்லை.



சிலுவையில் அறைந்துவிட பிலாத்துவின் சபை சொன்னதை அறிந்த மரியாள் உப்பைப் போலக் கரைந்துகொண்டிருந்தாள். முதல் முறையாக அவளுக்கு இயேசுவின் தண்டனை, ஜோசப்பை நினைவுகொள்ளச் செய்தது. அவள் ஜோசப்புக்காக கண்ணீர் விட்டாள். வாழ்வின் சுவையை ஒருபோதும் அறிந்திராத அந்தத் தச்சன் நினைவு இலை இலையாக உதிர்ந்தது. அன்றிரவு வசீகரமற்ற நட்சத்திரம் ஒன்று தனியே நடுங்கிக்கொண்டிருந்தது வானில். தன் வீட்டின் எதிரே ஒரு மனிதன் நின்று கொண்டி ருப்பதைக் கண்டாள். அவனிடம் அசைவே இல்லை. அந்த உருவம் சட்டென அவள் நினைவில் சரிந்து புலப்பட்டது. தச்சன் ஜோசப்பேதான். எதற்காக வாசலில் காத்திருக்கிறான். இது நிஜம்தானா? யோசிக்காது மரியாள் வீட்டினின்று வெளியேறி அவன் இருக்குமிடம் நோக்கி நடந்தாள். அவள் வரும்போது தச்சன் தெருவின் கடைசியில் நின்றான். அவள் அவனை அழைக்க

விரும்பினாள். ஆனால் என்றைக்கும் போல தீராத இடைவெளி அவர்கள் இருவர் இடையினுள் நீண்டுகொண்டிருந்தது.

கொல்கொதாவின் வழிகளில் கூட்டம் நிரம்பியிருந்தது. அவர் இரண்டு கள்வருக்கு நடுவே சிலுவையில் அறையப்பட இருந்தார். அந்தக் கள்வர்களின் மனைவியும், குழந்தைகளும் பிறர் அறியாதபடி தங்களை மறைத்துக்கொண்டு கூட்டத்தில் நின்றனர். இரண்டு கள்வர்களில் வயது மூத்தவன் காலின் விளிம்பில் நின்றபோதும் முகவாட்டம் கொள்ளாதவனாகவும், துஷ்டத்தின் மீது ருசி கொண்டவனாகவும் இருந்தான். மற்றவன் தன் மரணத்தை அறிந்துகொண்டவனின் சாந்தம் படர மௌனித்திருந்தான். கூட்டத்தில் அந்தத் திருடர்களின் பிள்ளைகள் தங்கள் தகப்பனின் சாவைக் காண நின்றிருந்தனர். துஷ்டத்தனம் கொண்ட கள்வன் என்றபோதும் அவன் மீதும் தீராத நேசம் கொண்ட பெண்ணாக இருந்த திருடனின் மனைவி குனிந்து விசும்பிக்கொண்டாள். இன்னொரு திருடனின் மனைவியின் கண்கள் மரச்சிலுவையைக் கண்டன. கூட்டத்தின் நடுவே இருந்த தனது தாயாகிய மரியாளைக் கண்டார் இயேசு. தன் சீடர்களில் ஒருவனை அழைத்து அவள் முன்னே 'இதோ உன் மகன்' எனக் கூறியபடி முன் நடந்தார். அவமதிப்பும் தூஷணை களும் நிறைவேறின. சிலுவையில் அறையப்பட்டார். அவரது கடைசிக் குரல் ஏலீ! ஏலீ! என உயர்ந்தது. இமைகள் தானே கவியத் தொடங்கின. கடைசி முறையாக ஜனத்திரளைக் கண்டபோது அவர் பார்வையில் ஓர் உருவம் பட்டுக் கலைந்தது. அது ஜோசப்தானே? விழித்தும் பார்த்தார். வேட்கை ததும்பும் முகத்துடன் நிற்கும் ஜோசப்பின் கண்கள் எதையோ யாசித்தன. அவன் கண்களில் உள்ள அந்த உலர்ந்த ஆசையை அறிந்தார். நீ தச்சன் ஜோசப் மகன்தானே. மனது ஜோசப்பை தந்தையே என விளிக்க நினைத்து ஏலீ! என வெளியானது. இக்குரல் ஜோசப்புக்காகத்தான் என சொல்லப்படுவதற்கு முன் அவரது இமைகள் தானே மூடிக்கொண்டுவிட்டன.